வெளியீடு எண். 797.

உ

சிவமயம்

# தித்திக்கும் அருள்சுரக்கும் முத்தையா!



வைத்தீசுவரன்கோயில்

1982.

விலை. பைசா. 0—70.

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 797.




உ
சிவமயம்

# தித்திக்கும் அருள் சுரக்கும் முத்தையா!

இந்நூல்

இவ்வாலய பரம்பரைத் தருமகர்த்தா
திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

துந்துபி ஆண்டு ஆனித்திங்கள் 5 ஆம் நாள்
**மண்டலாபிஷேக கிருத்திகை விழா மலராக**

**வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில்**

வெளியிடப்பெற்றது.

19—6—1982

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

---

வைத்தீஸ்வரன்கோயில் உலகிலுள்ள பலருக்கும் பிரார்த்தனைத்தலமாக விளங்குகிறது. உடல் பிணியையும் உயிர்ப்பிணியையும் தீர்த்தருளும் ஸ்ரீ வைத்தியநாதப் பெருமான் பவரோக வைத்தியநாதராக எழுந்தருளி அருட்காட்சி வழங்கும் இத்தலம் பல்வேறு மகிமைகளை உடையதாக இலங்குகின்றது. திருஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் பாடப்பெற்ற தலமாக விளங்கும் இது அங்காரகக்ஷேத்திரமாகவும் இலங்குகின்றது. இதன் சிறப்புக்களைப்பற்றிச் சமீபத்தில் 'ஞானபூமி' என்னும் திங்கள் இதழில் திரு. பொன். பாஸ்கரமார்த்தாண்டன் என்பார் மிகவிரிவாகவும் பக்தியோடும் எளிய நடையில் ஒரு கட்டுரை எழுதியிருந்தார்.

அதனைப் பயின்ற பக்தர்கள் பலரும் இது ஒரு நூல் வடிவில் வெளிவந்தால் எல்லோருக்கும் பயன்படும் என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் விண்ணப்பித்துக்கொண் டனர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும் இதனைத் திருவுளம்பற்றியருளினார்கள். 'தித்திக்கும் அருள்சுரக்கும் முத்தையா' என்ற தலைப்பிலே அக்கட்டுரையிலுள்ள அனைத்துச் செய்திகளையும் சேர்த்துப்பின்னும் புள்ளிருக்கு வேளூர் தலவரலாறுகள் சிலவற்றையும் சேர்த்து இந்நூல்

மண்டலாபிஷேகக் கிருத்திகை விழா மலராக அடக்க விலையில் வெளியிடப்பெறுகிறது. 'ஞானபூமி'யில் வெளி வந்த கட்டுரையை நூலில் பதிப்பித்துக்கொள்ள இசைந் தமைக்கு அவ்விதழ் ஆசிரியருக்கு நன்றி உரியது.

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுளப்பாங்கின் வண்ணம் வெளிவரும் இந்நூலை அன்பர்கள் பெற்றுப் பயன் பெறுவார்களாக.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
அருளாணையின்வண்ணம்,

வேளூர்
தேவஸ்தானம்
18—6—82

வித்துவான். இராமலிங்கத் தம்பிரான்,
கட்டளை விசாரணை.

உ

சிவமயம்

# தித்திக்கும் அருள்சுரக்கும் முத்தையா!



## தெய்வதரிசனம் வைத்தீசுவரன்கோயில்

உங்களுக்கு அந்தச் சந்தேகம் உண்டோ...

அதுதான்; 'கைலாசம் இமயமலையில்தான் இருக்கிறதா? அல்லது வேறு எங்கும் இருக்கிறதோ? ' என்ற சந்தேகம்...

அப்படியொரு சந்தேகம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதோ இல்லையோ, எனக்கு ஏற்பட்டு விட்டது...

அந்தச் சந்தேகத்துக்குக் காரணம், இன்னெரு தெய்விகச் சந்தேகம்.

ஆம்; மகாவிஷ்ணு ஒரு ராமாவதாரம் எடுத்து மாந்தர்களுக்குள் ஒருவராய் வாழ்ந்து, அந்த மனிதர்களின் வேதனைகளை யெல்லாம் அறிந்துகொண்டு - அனுபவித்துச் சென்றுரல்லவா...?

அதேபோல் மகாதேவனான ஈசனுக்கும், மனிதர்கள் மத்தியில் போய் வாழவேண்டும் என்று திடீரென்று எண்ணம் ஏற்பட்டிருக்க வேண்டும். அதுவிஷயமாக

அம்பாளிடம் கலந்தாலோசித்திருப்பார்... அப்போது அம்பாள், "நாம் போகிறதுதான் போகிறோம்... என் பிள்ளைகளான மாந்தருக்குப் பிறவியின்பயனை மாத்திரமல்லாது, உலகில் வாழும்போது அவர்களுக்கு ஏற்படுகின்ற எத்தனையோ உலகியல் பிணிகளையும் தீர்த்து அருளுகிற மாதிரி ஓர் அவதாரம் எடுத்துச் செல்லுவோம். அன்னையான எனக்குத்தான் பிள்ளைகள் துயர் தெரியும். அவர்களுக்குக் கொடிய உடல்நோய்கள் உண்டு. பிள்ளையில்லாக் குறை உண்டு. திருமணக்குறையுண்டு... எல்லாவற்றையும் அவர்களோடு இருந்து தீர்த்து வைத்துவிட்டு வருவோம் என்று கூறியிருப்பார்.

உடனே மருந்தும் தைலமும் எடுத்துக்கொண்டு - மாந்தரின் ஆன்மப் பிணி மட்டுமல்லாது உடல்பிணியையும் தீர்ப்பதற்கு வைத்தியர்களுக்கெல்லாம் பெரிய வைத்தியரான பவரோக வைத்தியநாதராய்ப் பூமிக்குப் புறப்பட்டு வந்துவிட்டார்கள் சுவாமியும் - அம்பாளும்.

கிருதயுகத்தில் அப்படி வந்தவர்கள் கலியுகம் ஆகியும் தம் இமயகைலாயத்துக்குத் திரும்பமுடியவில்லை. காரணம், மக்களாகிய நம்மிடமிருக்கும் பிணி அப்படி... அது தீர்ந்தால் அல்லவோ, 'வந்த வேலை முடிந்தாயிற்று' என்று ஈசனும் ஈசுவரியும் செல்லமுடியும்... நம் வியாதிகளும் குறைகளும் தீர்க்கத் தீர்க்க குறையக்காணோம்... இறைவனும் இறைவியும் தீர்த்துக்கொண்டே இருக்கிறார்கள்... இதில் யுகங்கள் போனதே தெரியவில்லை. கிருதயுகம் ஆயிற்று திரேதாயுகம் ஆயிற்று; துவாபரயுகமாயிற்று. கலியுகம் ஆயிற்று... ஊஹூம். அவர்களுக்கு வேலை தீர்ந்த மாதிரி இல்லை... கடைசியில் இங்கேயே நிரந்தரமாகத் தங்கி விட்டார்கள்.

அப்படி இறைவனும் இறைவியும் இப்புவியில் மக்களுக்கு அருள் வழங்கி - மறுமையில் மட்டுமல்லாது இம்மை

யிலும் அவர்கள் பிணியகற்ற வந்தமர்ந்த திருத்தலம் தான் வைத்தீஸ்வரன்கோயில்!

அதனுல்தான் முருகப்பெருமான் சூரனைவெல்வதற்குச் சத்தியிடம் வேல்வாங்க இந்தத் தலத்துக்கு! அவர்களைத் தேடிவந்தார்... இங்கேவந்தவரையும் கூடவே இங்கேயே உட்காரச்சொல்லி தம்மோடு வைத்துக் கொண்டார்கள் அம்மையும் அப்பரும்... அந்த அழகுக் குழந்தையான முருகக் குழந்தைக்குத்தான் தமிழ், தமிழ்நாடு என்ருல் நிரம்ப ஆசையாயிற்றே... ஈசனுக்கும் ஈசுவரிக்கும் செல்வ மான அந்தக் குழந்தை செல்வமுத்துக்குமாரசுவாமியாக இங்கேயே எழுந்தருளிவிட்டது...

–இப்படியெல்லாம் நடந்திருக்காது என்று நினைக்கிறீர் களா...?

இந்தத் தலத்துக்கு அருகே இருக்கும் சீர்காழியைப் பாருங்கள். உங்களுக்குப் புரியும். சீர்காழிஎன்றதும் ஞான சம்பந்தப் பெருமான் பாலுக்காக அழுததும் – அம்பாளே அமுதூட்டிய சம்பவமும் தானே நினைவுக்கு வரும்... கூப்பிடு தூரத்தில் இருந்ததால்தான், ஞானசம்பந்தரின் பசி தீர்க்க அத்தனை விரைவாக ஓடி வந்திருக்கின்ருள் அம்பாள்!

(தமிழகத்தில் தஞ்சைமாவட்டதில் சீர்காழிக்கு அருகே காவிரிக்கு வடபால் உள்ள இத்தலத்திற்குச் செல்ல ரயில் வசதியும் உண்டு. வைத்தீஸ்வரன்கோவில் உள்ள ஊரி லேயே ரயில்நிலையம் இருக்கின்றது! தஞ்சைமாவட்டம் மட்டுமல்லாது தமிழகத்திலுள்ள பெருவாரியான மக்க ளுக்குப் பிராத்தனைத் தலமான (பிறந்தகுழந்தைக்கு முதல் முடி இறக்கும் பிரார்த்தனை) வைத்தீஸ்வரன்கோவிலில் யாத்திரீகர்கள் வசதிக்குச் சத்திரங்கள், மடங்கள் உண்டு. இந்த ஆலயம் தருமபுரம் ஆதீனத்துக்குச் சொந்தமாக

இருந்து, அவர்களால் நிர்வகிக்கப்படுவதால் அதன்சுத்தத் துக்குச் சொல்லவேவேண்டாம்!)

ஃ ஃ ஃ ஃ

மந்திரமும் தந்திரமும் மருந்துமாக நின்ற அந்த பவ ரோக வைத்தியநாதன் திருத்தலத்தில் போய் நிற்கிறோம்...

## மந்திரமும் தந்திரமும் மருந்துமான மகேசன்!

ஆம்; அந்தப் பூமியில் நிற்கும் அளவு நமக்கு யோக்கி யதை வந்துவிட்டதா, என்ன?

எத்தனை எத்தனை புண்ணிய பாதங்கள் பட்ட தலம் அது!

புள் - எனும் வாய்மை மிகு ஜடாயு; 'ருக்கு' வாகிய வேதர்; 'வேள்' ஆகிய முருகக்கடவுள்; ஊர் (ஊர்ந்து செல்வதுபோல் தோன்றுவதால், 'ஊர்' என்னும் பெயர் பெற்ற சூரியன்) – இவர்கள் தவம் செய்து இத்தலத் துக்குப் 'புள்ளிருக்கு வேளூர்' என்று ஒரு பெயரையே நிறுவியிருக்கிறார்கள். இவர்கள் மூச்சுப்பட்ட காற்றையா நாம் சுவாசித்துக் கொண்டிருக்கிறோம்? இவர்களுடைய பாதங்கள் பட்ட பூமியையா நாம் மிதித்துக்கொண்டு நிற் கிறோம்... நமக்கு அங்கு நிற்க என்ன அருகதை உண்டு...

ஆனால் ஞானசம்பந்தப் பெருமானும் அப்பர் பெருமா னும் நமக்குத் தைரியம் சொல்கிறார்கள்...

'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்; பிரிவிலா அடியார்க்கு என்றும் வாராத செல்வம் வருவிப் பவன்; மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராத நோய்த் தீர்த்தருள வல்லவன்; இந்தப் புள்ளிருக்கு வேளூரான்" என்று இந்த வைத்தீசுவரப்பெருமானை நமக்கு அறிமுகப் படுத்துகிறார் அப்பர்பெருமான், தன் திருத்தாண்டகத்தில்.

ஞானசம்பந்தப்பெருமானே ‘ தீவினைக்கோர்மருந்தா. வான் ’ என்று நமக்கு நினைவூட்டுகிறார் தன் தேவாரத்தில்

நமக்குத் தெம்பு வருகிறது; நம்பிக்கை வருகிறது...

ஆமாம், தீராதநோய் தீர்த்தருளவல்லவன் – தீவினைக் கோர் மருந்தானவன்! இங்கிருக்க நாம் வேறு எங்குச் செல்வது?

நம்மிடம் இல்லாத தீவினையா? நம்மைச் சூழ்ந்திராத பிணியா.........? எல்லாவற்றிற்கும் மருந்தாகி நிற்கின்றானே வைத்தியநாதன் ... அவனைத்தேடித் தானே நாம் ஓட வேண்டும்... அந்தப் பெருமானும் நம்மைத்தேடியே – நமக்காகவே காத்துக்கொண்டிருக்கிறாரே... !

இதோ அவனைத் தேடி ஓடுகிறோம்

ஆலயத்திற்கு மேற்குப் புறமும் கீழ்ப்புறமும் கோபுர வாசல்கள் இருக்கின்றன. இருபுறமாகவும் தரிசனத்துக்குப் பிரவேசிக்கலாம்.

ஆனால் நாம் கீழ்ப்பக்கமாகவே செல்லலாம். அங்கே தான், கிருத யுகத்தில் ஈசனும் அம்பாளும் முதன் முதலாக எழுந்தருளிய ஆதிவைத்தியநாதர் சந்நிதி இருக்கிறது

நுழைந்ததும் நம் தரிசனத்துக்குள்ளாவது ‘வேம்படி மால்’ என்ற தலவிருட்சம். இந்த மரத்திற்கு என்ன வயசு தெரியுமா? கிருத யுகத்தில் ஈசனும் ஈசுவரியும் எழுந்தருளி யதிலிருந்து தொடங்கிய ஆண்டுகள்தான் அதன் வயது!

ஒவ்வொரு யுகத்திற்கும் ஒரு பெயர் கொண்டிருக்கிறது அது; கிருத யுகத்தில் அது கதம்பவனம். திரேதா யுகத்தில் அது வில்வவனம்; துவாபர யுகத்தில் அது வகுளவனம்; (மகிழம்பூ) கலியுகத்தில் நம் கண் பார்வையில் வேம்பு

இது கலியுகவாசிகளான நம் யோக்கியதை ... மகிழ மரமே நம் பார்வை பட்டதால் வேம்பாகி விட்டதே ... நாம் அதை வேம்பாக்கிக் கசக்கச் செய்துவிட்டாலும் அது நம்பிணி தீர்க்கும் மருந்தாகிவிடுகிறது. இந்த வேம்பினை யும் விபூதிபிரசாதம் ஆகியவற்றையும் அரைத்துத்தான் 'திருச்சாந்துருண்டை' எனும் இத்தலத்துக்கே விசேடமான மருந்து தயாரிக்கப்படுகிறது. பிணி தீர்க்கும் மருந்தாக மக்கள் போற்றுவது இது. ஆலயத்தில் இலவசமாகத் தருகிறுர்கள்.

ஆலயத்து ஆகம பட்டர் திரு. சுப்பிரமணிய சாஸ் திரிகள் ஒரு புதிய செய்தியையும் கூறுகிறுர் :-

"இறைவன் அருளால் மட்டுமல்லாது, சில சித்தர்கள் அடங்கியிருப்பதாலும் சில தலங்கள் மகிமைபெறும். ஏனென்றுல் சித்தர்கள் சமாதியில் அடங்கினுலும் அவர்கள் அடங்கிய இடத்தில் காலங்காலமாக மகிமைகள் நடக்கும்.

தில்லையில் திருமூலர் அடங்கினர். பழனியில் போக நாதர் அடங்கினர். ... அதுபோல் இத்தலத்தில் அடங்கிய சித்தர் வைத்திய சாஸ்திரத்துக்கே நாயகரான தன்வந்திரி அப்படியிருக்க எந்தப்பிணியும் இத்தலத்துக்கு வந்தால் நீங்கிவிடுமே!" என்கிறுர்.

நம் பிணி நீக்க தன்வந்திரி இருக்கிறுர் என்றுல், நமக்குப் பிணியே வராதிருக்க ஒரு திருவிளையாடலையும் நடத்தியிருக்கிறுர், இறைவன்.

அது கோபுரத்தைக் கடந்து பிரதட்சணமாகச்செல்லும் போது நமக்குத் தெரிகிறது. வெளிப் பிராகாரத்தில் தென் மேற்குப் பகுதியில் சந்நிதி கொண்டிருக்கிறுர் செவ்வாய். அவர் அங்கு எழுந்தருளியதே, மக்களுக்காக இறைவன் நடத்திய விளையாட்டு!

## கைலாசம் இருப்பது இமயத்திலா? தமிழகத்திலா?

பொதுவாக நமக்குப் பிணி அளிக்கும் ரோககாரகன் செவ்வாய் ( அங்காரகன் ) என்பார்கள். நம் மேனியில் வெப்பத்தை உண்டாக்கிப் பிணியை உண்டாக்குவானும் அவன். அதோடு அவன் ( செவ்வாய் ) தோஷத்தால் பல கன்னியர் திருமணத் தடை ஏற்பட்டும் சிரமப்படுகிறுர்கள். இந்தரோககாரகனை-தோஷவாதியைப்பெருமான் அடக்கிக் கட்டுப்படுத்தி விட்டார்.

ஆம்; அந்த வியாதிகாரனுக்கே, செங்குட்டவியாதி வந்து அது தீர, இங்கு வந்துதான் வழிபட்டுப் பிணி நீங்கப் பெற்றுன்.

இப்படி அவனுடைய விஷகுணத்தை மடக்கவே இறைவன் அவனுக்குக் குட்டநோயை அளித்தாரோ . ?

அதனுல் செவ்வாய் உபாதை உள்ளவர்கள், தோஷ நிவர்த்தி பெறுகிற இடம் வைத்தீஸ்வரன் கோயில். இந்த அங்காரக க்ஷேத்திரத்தில் செவ்வாய்க்கிழமைதான் விசேஷம். அதிலும் தைச் செவ்வாய்க்கிழமைகள் மிகவிசேடமாம். அங்காரகனுன செவ்வாய் இங்கு நன்மையே செய்வான் என்பதற்கு இன்னெரு உத்திரவாதமும் அங்கிருக்கிறது: அதாவது, செவ்வாயின் அதி தேவதையான முருகப் பெருமான் – செல்வமுத்துக் குமாரசாமியாக ஏக செல்வாக்குடன் அத்தலத்தை ஆள்கிருரே . ! அவர் பார்வையில் இருக்கும்போது செவ்வாய் நன்மைகளைப் பொன்ணுகச் சொரிந்துதானே ஆகவேண்டும்!

போதும் போதாததற்கு, செவ்வாய் சந்நிதி அருகே சுரஹரேஸ்வரர் இருக்கிருர். தொடர்ந்து ஜுரம் வந்தால் அவருக்கு 108 குடம் தண்ணீர் விட்டு அபிஷேகம் செய்தால் ஜுரம் நிவாரணமாகி விடுமாம் ... அவர் சந்நிதியில் நவக்கிரகச் சக்கரம் இருக்கிறது ...

ஆனல் நவக்கிரகங்கள் எங்கே?

அது ஒரு சுவையான செய்தி ...

இந்தத் தலத்தில் வியாதிதரும் செவ்வாய்க்கே வியாதியைத் தந்து அடக்கியதுபோல், நம் வாழ்வில் பல வக்கிரங்களை உருவாக்கும் நவக்கிரகங்களின் வக்கிர அமைப்பையே மாற்றி அவர்கள் அனைவரையும் ஒரே நேர்க்கோட்டில்வைத்துவிட்டார், வைத்தியநாதர். அதுவும் எங்கே ...? மற்ற தலங்களில் எல்லாம் சுவாமிக்கு எதிரே இந்த நவக்கிரகங்கள் இருக்கும் இந்தத் தலத்திலோ எல்லாரையும் தன் சந்நிதிக்குப் பின்னல் கைதொழுது நிற்க வைத்துவிட்டார் ஈசன் ... ஆக வைத்தியநாதப் பெருமானின் அருளைப் பெற்றுவிட்டவர்களுக்கு நவக்கிரகங்கள் எந்தத்தொல்லையும் தரமுடியாது. அதனலேயே இத்தலத்திற்குக் கோளிலித்தலம் என்று பெயர். அதாவது கோள்கள் ( நவக்கிரகங்கள் ) செயலற்றுப்போன தலம்.

இந்த மகிமையால் தான் ஞானசம்பந்தப்பெருமான், 'வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டனுகிய, ஈசன் துணையிருக்கும்போது, 'நாளென்ன செய்யும், கோளென்ன செய்யும்!' என்று கேட்டாரோ?

பிரதட்சணமாகச் சென்று—ஆலயத்தின் தென்பகுதியிலிருக்கும் சித்தாமிர்த தீர்த்தத்தை அடைகிறோம் ...

தல விருட்சத்தைப்போல் இதுவும் யுகத்திற்கு யுகம் சில மகிமைகளையும் - கூடவே பெயர்மாற்றத்தையும் பெற்றிருக்கிறது.

கலியுகத்தில், சித்தாமிர்த தீர்த்தம்.

இந்த யுகத்தில் இதன் மகத்துவம் என்ன?

"இதில் மருத்துவச்சத்து நிறைந்திருக்கிறது. இந்தநீரில் இப்போதும் பாம்பும் தவளையும் ஜீவிக்காது. அவற்றை விட்டால் உடனே வெளியேறி விடும் !" என்கிருர்கள்.

அந்தத் தீர்த்தத்தை அடுத்து தட்டிச் சுற்றி மண்டபம் இருக்கிறது. அது அம்பாள்சந்நிதிக்கு நேர்எதிரேயிருப்பது. அங்கே வைத்துதான் தினந்தோறும் திருப்பள்ளி எழுச்சி யின் போது கோபூஜை நடக்கும்.

நாம் இந்தத் தலத்துக்குள் நுழைந்ததுமே நமக்கு ஒரு குழப்பம் வருவது இயற்கை. 'இத்தலத்தில் எந்த மூர்த்தி பிரதானமானது ?' என்ற குழப்பம்தான். திருச்செந்தூர் போனல் சுப்பிரமணியன், மதுரைக்குச் சென்ருல் மீனுட்சி, மலைக்கோட்டைக்குப் போனல் தாயுமானவர்... இப்படி ஒவ்வொரு மூர்த்தியும் பிரதானமாக இருப்பதைப் போல, இந்தத் தலத்தில் எந்த மூர்த்தி பெரியவர்...?

எல்லா மூர்த்திகளும் பெரியவர்கள்தாம்... எல்லாரும் மகத்தான மகிமை பெற்றவர்கள் தாம்.

கற்பகவிநாயகர் - முழுமுதற்கடவுள். அவர் எந்தத் தலத்திலும் முதல் மரியாதைக்காரர். இந்தத்தலத்திலும் அப்படியே !

மற்றவர்கள் — வைத்தியநாதசுவாமி — அம்பாளான தையல்நாயகி — இவர்களுடைய செல்லப்பிள்ளையான முத்துக்குமாரசுவாமி நம் முருகவேள். மூன்றுமூர்த்திகளும் ஒருசேர உச்சிதச் சிறப்போடு இருக்கிருர்கள்.

இங்குச்சென்றதும் யாரை முதலில்வணங்குவது என்று நமக்குக் குழப்பம் ஏற்படும். இந்தக் குழப்பம் நம் உடன் பிறந்தது. நாலு அரசாங்க அதிகாரிகள் ஒருசேர நின்ருல்

முதலில் யாரை வணங்குவது என்று தெரியாமல் கையைப் பிசைந்து நிற்போம்! மனித அதிகாரிகள், 'யாரைத்தான் வணங்குகிறுன் பார்க்கலாமே' என்று நம்மைச்சோதிப் பார்கள்.

ஆனுல் இந்தத் தலத்திலுள்ள மூர்த்திகளோ நம்மைத் தொல்லைகளில் இருந்து விடுவிக்கவந்த கருணைமூர்த்திகள். இந்தச் சின்னப் பிரச்சனையை நமக்குத் தருவார்களா?

அதனுல் 'யாரைவேண்டுமானுலும் நீ நின்ற இடத்திலிருந்தே தரிசிக்கலாம்' என்று ஒரே இடத்தில் கூடியிருக்கிருர்கள்......

ஆம்: நாம் அவர்களைத் தேடிச்சென்ருல், ஒரே இடத்தில் கூடிநிற்கிருர்கள் அருள்சுரக்க.

அங்கு நின்று தெற்கே பார்த்தால் தீர்த்தம். திரும்பி வடக்கே பார்த்தால். அம்பாள் பாலாம்பிகையான தையல் நாயகி. மேற்கே பார்த்தால் கொடிமரம். தென்மேற்கே பார்த்தால் கற்பகவிநாயகர். கிழக்கே பார்த்தால், மேற்கு நோக்கி சந்நிதிகொண்டிருக்கும்வைத்தியநாதப்பெருமான். அருகில் அம்பாளுக்கும் சுவாமிக்கும் நடுவே செல்வ முத்துக் குமார சுவாமி! அவர்கள் அப்படிக் கூடிநிற்பதால் தான் நம் பிரார்த்தனை அங்குக் கைகூடிவருகிறதோ!

அங்கேநின்று தொழும்பொழுது, நம்மீது அமுதப்பிரவாகமாக பஞ்சநதியும் ஒவ்வொரு திக்கிலிருந்து பெருக்கெடுத்துவந்து நம்மை ஆட்கொள்வதுபோல் —

ஒவ்வொருமூர்த்தியின் ஈர்ப்பிலும் நாம் கரைந்து, புனிதப்படுவதுபோல் நெகிழ்ந்துநிற்கிரேம்.

நம்நோக்கில் அனைத்து மூர்த்திகளும் ஒரேசக்தியுள்ளவர்களாக இருப்பினும், அந்தத் தெய்வக் குடும்பத்தில் ஒரே ஒருவருக்குத்தான் செல்வம் அதிகம்.

அவர்தான் முருகவேள் !

அம்பாளும் சுவாமியுமே அவருக்குத்தான் அதிக செல்வாக்கைக் கொடுத்திருக்கிறார்கள். விழா, விசேடம் எல்லாவற்றிலும் அவருக்குத்தான் தனி மரியாதை.

செவ்வாய், முருகனின் நாள்.

இந்தத்தலத்தில் அனைத்துவிசேடங்களும் செவ்வாய்க் கிழமைதான். அதிலும் தைச் செவ்வாய் முத்துக்குமார சுவாமி விழா தனிச்சிறப்பு... ஒவ்வொரு மாதமும் கார்த்திகைத் திருநாளில் முருகப்பெருமான் எழுந்தருளுவதும், அம்மையப்பரிடம்விடைபெறுவதும் அபிஷேக மண்டபத்தில் அபிஷேகம் கொண்டு ஆயிரமாயிரம் மக்களுக்கு அருள் பாலிப்பதுவும் மெய்சிலிர்க்க வைக்கும் திருக்காட்சிகள்...

## ஒரு செல்லப்பிள்ளை அள்ளி அள்ளி அருள் வழங்கும் அருந்தலம் !

அரசாங்கஅலுவலகங்களில் பொதுமக்களுக்குப்பதில் சொல்லி, அவர்கள் பிரச்சினையைத் தீர்க்கப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி இருப்பார். அதுபோல் இத்தலத்தில் மக்கள் தொடர்புத் தெய்வம் முருகப்பெருமான்தான். அவரைச் சரணடைந்து விட்டால் போதும்; மற்றவர்களின் அருளும் கூடிவிடும்... அவருக்கு அத்தலத்தில் என்ன செல்வாக்கு என்று ஒவ்வொரு நாள் அர்த்த ஜாமப் பூஜையின் போதே காண்கிறோம்...

எந்தத் திருத்தலத்திலும் ஈசனும்-ஈஸ்வரியும் பள்ளியறை சேர்ந்த பின்னர்தான் அன்றைய தீர்த்தப் பிரசாத தரிசனம் நிறைவு பெறும்...

ஆனல், இந்தத்தலத்தில் மட்டும் அப்படியல்ல. அர்த்த ஜாமப்பூஜையின்போது முத்துக்குமாரசுவாமியின் சந்நிதியில் பூஜையாகி, அவருக்குச் சார்த்தியிருக்கும் நேத்திரப்பொடிசந்தனம் (அபூர்வப்பிரசாதம்)விநியோகம் ஆனதும் அத்துடன் பூஜை முடிந்து விடுவதாக ஐதீகம். அதற்குப் பின்தான் சுவாமி சந்நிதியிலும், அம்பாள் சந்நிதியிலும் பூஜை ஆகும் என்ருலும், அங்கே விபூதி பிரசாதம்கூட விநியோகம் கிடையாது.

இந்தத் திருத்தலத்தில் இந்த செல்லப்பிள்ளைக்குத் 'தாலேலோ தாலேலோ' என்று தாலாட்டுப் பாடித்தூங்க வைக்கும் காட்சி சுவையிலும் சுவை.

முத்துக்குமாரசாமி உற்சவமூர்த்திக்கு இரட்டைத் திருவாசி அமைந்திருப்பதுகூட அவருடைய இரட்டைப்பெருமைக்குச் சான்று போல்தானிருக்கிறது.

இந்த முருகன், அம்மையப்பருக்கு மட்டும்தான் செல்லமா? நமக்கு இல்லையா?

அதோ, அந்தச் சந்நிதியில் நின்றுதொழும் போது நம் காதுகளில் தேனைப் பாய்ந்து மெய்சிலிர்க்க வைக்கும் ஒரே குரல்: 'முத்தையா!' 'முத்தையா!' என்பதுதான்.

முத்துக்குமாரசுவாமியை 'முத்தையா', 'முத்தையா' என்றுதான் பக்தி பொங்கிட சிலிர்க்கச் சிலிர்க்க அழைத்து உருகுகிறது பக்தர் கூட்டம்.

ராமநாதபுரம் – சேலம் போன்ற இடங்களிலிருந்து பரம்பரை பரம்பரையாக இந்த முன்னேறிய காலத்திலும், வண்டி கட்டிக்கொண்டு நடந்து வரும் பக்தர்களும் – தம் குடும்பத்துக்குழந்தைகளுக்கு முதன்முதலாக இத்தலத்தில் தான் முடியிறக்கும் விழா நடத்தும்பெற்ருேருமாக அங்குப்

பெருகி நிற்கும் பக்தர்கள் கூட்டத்தில் எங்கும் ஒலிப்பது 'முத்தையா முத்தையா' என்ற குரல்தான். ( அங்கு தரிசனத்துக்கு வந்திருந்த அ. தி. மு. க. மாநில விவசாயப் பொதுச்செயலாளர் திரு. கோ. லட்சுமணன், தன் குடும்பத்துக்குப் பரம்பரை, பரம்பரையாக முத்துக்குமாரசாமி தான் குலதெய்வம்!' என்கிறார் )

இந்த பக்தர்கள் மட்டுமா ?

திருச்செந்தூரில் முருகன் அருளால் பேசும் பாக்கியம் பெற்ற குமரகுருபர சுவாமிகள் பிள்ளைத்தமிழ் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள், இந்த முருகன் பேரில்!

அருணகிரிநாதர், தன்திருப்புகழில் இந்த முத்துக்குமார சுவாமியைச் சித்தம்கனியப்பாடி மகிழ்ந்து பூரித்திருக்கிறார்.

தருமை ஆதீனம் பத்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் தான் இயற்றிய முத்துக்குமாரசுவாமி திருவருட்பாவில்,

" முத்தர் குருவே – யோக சித்தர் குருவே –
பால முத்துக்குமார குருவே! "

என்று சிந்தை கனியக் கனியப் பாடி உருகுகிறார் !

முத்துக்கு முத்தாய் – சித்தர்க்குச் சித்தனாய் – பக்திக்குச் சித்தாய் அந்தப்பித்தருக்கே செல்லமாய்த்திகழும் முத்துக் குமாரசுவாமியையும் அம்மையப்பரையும் தரிசித்து வலம் வந்த நாம் ஒரு சந்நிதியில் மெய்சிலிர்க்க நிற்கிறோம்.

அதுதான் ஜடாயு குண்டம்!

ஆம்; ராமாயணத்தில் இறவாப் பெருமை பெற்ற ஜடாயு, ஸ்ரீராமபிரானால்தகனம்செய்யப்பட்ட இடம், அது!

அந்த மகத்தான நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கிறோம்...

ஃ ஃ ஃ ஃ

ராமாயணத்தில்—

இராவணன் சீதையைத் தூக்கிச்செல்கிறான். அப்போது ஜடாயு என்ற பறவை அவனை மறிக்கிறது. அந்த ஜடாயு, இந்த வைத்தியநாதசுவாமியை துவாபர யுகத்தில் (இது வகுளவனமாக இருந்தபோது) வழிபட்டுக் கொண்டிருந்த உன்னதமான பட்சி.

தன்னை எதிர்த்து மறித்த ஜடாயுவை வெற்றி கொள்ளப் போரிடுகிறான் ராவணன். சீதையை அவன் தூக்கிச் சென்றுவிடக் கூடாதே என்ற பதைப்பில் ஜடாயு போரிடுகிறது.

ஜடாயுவின் வல்லமை புரியாத ராவணன் அதைப் புரிந்தபின் தடுமாறுகிறான். அதை எப்படிவெல்வது என்று புரியாமல் குழம்புகிறான். எங்கே தாக்கினாலும் ஜடாயு சாய்வதாக இல்லை.

கடைசியாக ஜடாயுவிடமே, "உன் உயிர் நிலை எங்கிருக்கிறது? என்ன செய்தால் நீ இறப்பாய்?" என்று கேட்கிறான்.

என்ன ஈனமான கேள்வி...?- நா கூசாமல் கேட்கிறான் ராவணன்.

வேதம் கற்ற ராவணன் -பிரம்ம குலத்தவனான ராவணன்-பொய்வேடமிட்டுப் பொய்மானை ஏவிகீழ்மைப் புத்தியோடு பிறன் மனைவியைத் தூக்கிச் செல்லும் ஈனக் காரியத்தைச் செய்திருக்கிறான்.

ஆனல், அந்தப் பொய்யனிடம் தன் உயிர்நிலையைப் பற்றிய சத்தியத்தைச் சொல்கிறது ஜடாயு என்கிற பட்சி, "என் உயிர் என் இறக்கைகளில் இருக்கிறது" என்று.

மறுகணம் அந்த மாபாதகன் அதன் இறக்கைகளை வெட்டி அதைச் சாய்க்கிறுன்.

மரணத்தின் முனையிலும் உண்மையே பேசிய ஒரு சத்தியமே ஜடாயுவின் உருவில் அங்கே சாய்ந்தது...

அந்த உன்னத சத்தியத்துக்கு இறுதிக்கடன் செய்ய வேண்டுமே...

ஆம்; சத்தியத்துக்கு இறுதிக்கடன் செய்யும் தகுதி யாருக்கு உண்டு...?

இன்னெரு சத்தியத்துக்குத்தான் உண்டு.

தந்தையின் சத்தியவாக்குக்காக வனவாசம் மேற்கொண்டு அதோ சத்திய சொருபமாக வருகிறுனே, அந்த சத்தியநாதன் ஸ்ரீராமபிரானுக்குத்தான் உண்டு...

அவனுக்காகக் காத்திருந்து, அவனிடம் சீதை பற்றிய செய்தியைக் கூறிவிட்டு, அவன் மடியில் உயிர் விடுகிறது ஜடாயு.

அந்த ஜடாயுவுக்கு ஒரு மகனுக நின்று தகனக்கிரியை செய்கிறுன் ராமன்.

அயோத்தியில் இறந்த தசரதனுக்கு அந்த ஸ்ரீராமன் தகனக்கிரியை செய்யவில்லை. இத்தனைக்கும் மூத்த பிள்ளையான அவன்தான் செய்திருக்க வேண்டும், ஆனல் செய்யவில்லை.

**வைத்தியருக்கும் வைத்தியரான வைத்தியநாதர்!**

காரணம்?

அவன் சாதாரண மனிதனுக்குப் பிதுர்காரியம் செய்ய அவதரித்தவன் அல்லன்: சத்தியத்துக்குத்தான் கடமை செய்ய வந்தவன். அதனுல்தான் தசரதனுக்குச் செய்ய வில்லே, ஜடாயுவுக்குச் செய்தான்!

இந்த மகத்தான சம்பவம் நிகழ்ந்தது இத்தலத்தில் தான்.

அந்த ஜடாயுவின் சாம்பல் விழுந்தஇடம் என்பதற்கு அடையாள நினைவாக அங்கிருக்கும் குண்டத்திலுள்ள திருச்சாம்பலே பக்தியோடு எடுத்து பூசிக் கொள்கிருர்கள் மக்கள்.

நானும் எடுத்து பூசிக்கொண்டேன். சத்தியத்தின் ஒரு துளியாவது நம்மேல் படட்டுமே!

ஃ ஃ ஃ ஃ

இந்தச் சந்நிதியில் இறைவனேத் துதித்துப் பெருமை பெற்றது துவாபர காலத்து ஜடாயு மாத்திரம்தானு...?

இந்தச் சந்நிதியில் நாலேந்து ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு சம்பவம். ஆலய சீஃப் சூப்பரிண்டெண்ட் திரு. கே. சுப்பிரமணிய பிள்ளே மன நெகிழ்ச்சியுடன் தெரிவித்தார் அதை...

சுமார் 28 வருடமாக அந்தத்தலத்தில் இருந்த கோவில் யானே அது.

தினந்தோறும் நடக்கும் கஜபூஜையில் கலந்து கொள் வது - குழந்தைகளுக்கு முதல் முடி எடுக்கும் பிராத்தனே ஸ்தலமான அதில் முடி எடுக்கும் குழந்தைகளேத்

தன் துதிக்கை மூக்கினல் ஆசீர்வதிப்பது (விஞ்ஞானப்படி யானை முச்சுப்படுவது ரோக நிவாரணமாம்!) – திருவிழாக் காலங்களில் தட்டிச் சுற்றி மண்டபத்தைச் சுற்றிச் சுற்றி இறைவனுக்கு வெண்சாமரம் வீசுவது...

இவையெல்லாம் அந்த யானையின் பணிகள்... 28 ஆண்டுகளாக மிக அமைதியாக அது செய்துவந்த பணிகள்.

திடீரென்று அந்த யானைக்கு உடல்நோய் ஏற்பட்டது, அதன் கொட்டகையில் வைத்து வைத்தியம் செய்து கொண்டிருந்தார்கள்.

அந்த யானைக்கொட்டகை இறைவன் சந்நிதிப் பார்வைக்கு ஒதுங்கிய பகுதியில், தெற்கு வடக்காக இருந்தது. சுவாமி கீழ்ப்புறத்தில் அமர்ந்து மேற்குப் பார்த்திருக்கிறார்.

யானைக்கு மருத்துவர்கள் செய்த வைத்தியம் பயனற்றுக் கொண்டிருந்தது.

திடீரென்று அந்த யானை கீழே விழுந்தது.

விழுந்த யானை – இதுவரை அசைவற்றிருந்த யானை – விழுந்த நிலையிலிருந்தே மெல்ல மெல்ல ஊர்ந்து தன் கொட்டகையின் வாசற்புறத்திலிருந்த கல்தூணை முட்டித் தள்ளியது.

ஊர்ந்துவரும் யானை கொட்டகையைவிட்டு வெளியே வருவதற்கு இடைஞ்சலாக இருந்தது அந்தத் தூண்.

சூப்பரின்டெண்ட் அந்தத் தூணை அந்த இடத்திலிருந்து அப்புறப்படுத்தச் செய்தார்.

தூண் அப்புறப்படுத்தப்பட்டதும், யானை அதன் வழியே மீண்டும் ஊர்ந்து ஊர்ந்து வெளியே வந்தது.

ஜனங்கள் எல்லாரும் சுற்றிநின்று பார்த்துக்கொண்டிருக் கிறார்கள்.

இத்தனை நேரமும் அசைவற்று நின்று கொண்டிருந்த யானை, ஏன் அப்படிப் பிடிவாதமாக ஊர்ந்து வெளியே வருகிறது? எங்கே போகிறது?

யாருக்கும் புரியவில்லை. எல்லாரும் வியப்புடனும் கலவரத்துடனும் தடுமாறித் தடுமாறி ஊர்ந்து நகர்ந்து கொண்டிருக்கும் யானையைப்பார்த்துக் கொண்டிருக்கிறார் கள்.

மெல்ல மெல்லப் புரண்டு உருண்டு நகர்ந்து சென்ற யானை, நேராகச் சுவாமியின்சந்நிதிதென்படும் இடத்துக்கு வந்தது. மிகச்சிரமப்பட்டு தன்கனத்த உடலைச் சுவாமிக்கு எதிராகத் திருப்பியது. தன் துதிக்கையை உயர்த்தியது. மறுகணம், அதன் உயிர் பிரிந்துவிட்டது.

'ஆ!' என்று கூடியிருந்த அத்தனை பேரும் மெய் சிலிர்த்தனர். தெய்வச் சந்நிதியைத் தேடிவந்து ஒரு வாயில்லா ஜீவன் துதித்து உயிர் நீத்த இந்தச் சம்பவம் – நான்கே நான்கு வருடங்களுக்குமுன் – வைத்தீஸ்வரன் கோவிலில் பலரறிய நடந்திருக்கிறது.

ஃ ஃ ஃ ஃ

அப்படியே கண்கலங்க அந்த வைத்தியநாதனைத் தொழுது நிற்கிறோம்...

நான்கு யுகங்களுக்கும் ஒரு சத்தியப் பாலமாக நிற்கும் அந்த நாதனைத் தொழுது நிற்கிறோம்.

நான்கு வேதங்கள் – அங்காரகன் உள்ளிட்ட கோள்கள் அத்துடன் சூரியனும் அடங்கிய பிரபஞ்சமே தொழுதேற்ற துலங்கும் அந்தப் பெருமானை—

பறவையும் யானையும் பக்தியால் நம் தகுதியை உயர்த்தி மேம்பட்டு வணங்கிய ஈசனை –

எந்தத் தகுதியுமின்றி – இத்தரையில் நின்று தொழுது நிற்கிறோம்.

சத்தியச் சிறகடித்துப் பறந்துநின்று பூஜைசெய்யும் ஜடாயுவாகவும் நாம் பிறக்கவில்லையே... !

இறுதிவரை அவன் சந்நிதி கண்டு உயிர்விடுதலைப் பெற்ற யானையாகவும் பிறக்கும் பாக்கியமும் பெறவில்லையே... !

'பண்ணொன்ற இசைபாடும் அடியார்க்கு, மண்ணின்றி விண்ணையும் கொடுப்பான் இந்த மணிகண்டன்' என்றார் ஞானசம்பந்தர். ஐயோ, நமக்கு அவ்வாறு செஞ்சொல் கவிபாடி எந்தையின் சிந்தை குளிர்விக்கவும் திறன் இல்லையே !

ஆனாலும் நமக்கு அவன் கருணையால்–
அவன் திருத்தலம் தேடி ஓடக் கால்கள் உண்டு;
அவன் மலரடி பற்றித் தொழக் கரங்கள் உண்டு;
அவனை நினைத்து உருக ஒரு நெஞ்சமுண்டு.

அவன் திருக்காட்சி கண்டு ஆனந்தக் கண்ணீர் வடிக்கக் கண்கள் உண்டு...

அனைத்துக்கும் மேலாக நம்மை அரவணைக்கவே வானுயர்ந்த அவன் அருள் உண்டு...

அப்புறமுமென்ன...

அழுவாய், தொழுவாய் நன்னெஞ்சே...

பேராயிரம்பரவி வானோரேத்தும் அந்தப் பெம்மானை -

தீரா நோய் தீர்த்தருள வல்லானை-

தீவினைக்கோர் மருந்தானானை-

அவன் திருப்புதல்வனைத் தினம் தினம் நினைந்து உருகுவாய்... !

அய்யனே என்று அழைத்திட்டால் அமிர்தமாய் அவனருள் பொங்கிடுமே !

முத்துக் குமரா என்றால் மூவ்வினையும் தீர்ந்திடுமே !

தித்திக்கும் அருள் சுரக்கும் முத்தையா !

நீயன்றோ எங்கள் சொத்து ஐயா !



உ

சிவமயம்

# திருப்புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு

---

## தலப்பெயர்கள்

புள் ( ஜடாயு ), இருக்கு ( இருக்குவேதம் ), வேள் (முருகன்), ஊர் (சூரியன்) என்ற நால்வரும் பூசித்தமையால் புள்ளிருக்குவேளூர் எனவும், சடாயு பூசித்தமையால் சடாயுபுரி எனவும், வேதம் பூசித்தமையால் வேதபுரி எனவும், கந்தன் பூசித்தமையால் கந்தபுரி எனவும், சூரியன் பூசித்தமையால் பரிதிபுரி எனவும், அங்காரகன் பூசித்தமையால் அங்காரகபுரம் எனவும், அம்பிகை பூசித்தமையால் அம்பிகாபுரம் எனவும் பல பெயர்கள் உள்ளன. இவையன்றி வினைதீர்த்தான்கோயில், தையல்நாயகி கோயில், வைத்தீசுவரன்கோயில் முதலான பற்பல பெயர்களும் இத்தலத்திற்கு வழங்குகின்றன.

## மூர்த்திகள்

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருநாமம் ஸ்ரீவைத்தியநாதர். அம்மையார்திருநாமம் ஸ்ரீதையல்நாயகி. முருகப்பெருமான் திருநாமம் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர். இப்பெருமானே "எவ்வாறு துதிப்பேன்" என்று மயங்கிய அருட்புலவராம் குமரகுருபர அடிகளுக்குப் "பொன் பூத்தகுடுமி" என அடியெடுத்துக் கொடுத்துப் பாடும்படி அருள் செய்தவர். மேலும் இத்தலத்தில் நவக்கிரகங்கள் வரிசையாக அமைந்திருக்கின்றன. கோள்வலியற்ற இடங்களிலேதான் இவ்விதம் நவக்கோள்களும் ஒரே

வரிசையில் அமையப்பெறுவது. இங்கு அங்காரகனுக்குப் பெருமை அதிகம். இது அங்காரக க்ஷேத்திரம்.

## தலப்பெருமை

முருகன் சூரன் மார்பைப் பிளக்க வேல் வாங்கியது இத்தலத்திலே. தன்னிடத்து வசிக்கும் உயிர்கள், இயம லோகம் அடையப்பெறுததும், பிடித்த பேய்கள் ஓடப் பெறுவதும், இறைவன் நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டு வியாதிகளையும் தீர்க்கத் திருவுளங்கொண்டு தையல்நாயகியம்மையார் தைல பாத்திரமும், சஞ்சீவியும் வில்வமரத்து அடிமண்ணும் எடுத்துக்கொண்டு தம்முடன் வர வந்து வைத்தியராகி அருள் செய்திருக்கப்பெற்றதும், அறுசுவையோடு கூடிய உணவை அடியார்களுக்கு உண்பித்து மாகேசுர பூசை செய்யப்பெறுவதும், பிறந்தாலும் இறந்தாலும் போகமோட்சங்களைக் கொடுப்பது மாகிய பெருமையினையுடையது இத்தலம்.

நேத்திரப்பொடி சந்தனம் :- ஸ்ரீ செல்வமுத்துக்குமாரருக்கு அர்த்தயாம பூஜையில் சாத்தப்படுவது. அணிபவர்களுக்கு வேண்டிய பலன்களைக் கொடுக்கவல்லது.

சடாயுகுண்டம் :- சடாயுவின் வேண்டுகோட்படி இராமபிரான் இத்தலத்தில் ( விபூதி குண்டத்தில் ) சிதையடுக்கிச் சடாயுவின் உடலை வைத்துத் தகனஞ் செய்ததனல் இப்பெயர் பெற்றது. சிவ புராணத்தைப் பராமுகமாகக் கேட்டதினல் வீரசேனனென்னும் அரசனுக்கு ஏற்படவேண்டிய கயரோக நோய் அவனைப்பற்றாது, அவன் புதல்வனாகிய சித்திரசேனனைப்பற்ற அவ்வரசன் குருவாணைப்படி இத்தலத்துவந்து நீராடி இறைவழிபாடு இயற்றி இக்குண்டத்திற்கு அதிரசம், வடை முதலியன நிவேதித்து, வேதிகையும் பொன்னல் செய்து முடித்து,

குண்டத்திலுள்ள நீற்றை எடுத்துத் தானும் அணிந்து தன் புதல்வனுக்கும் அணிவிக்கப் புதல்வன் நோய்நீங்கப் பெற்ருன். இன்றும் அக்குண்டத்திலுள்ள நீற்றினை இட்டுக்கொண்டு பலரும் பலவிதமான பிணிகளும் நீங்கப் பெறுகிருர்கள்.

திருச்சாந்துருண்டை :- இது வைத்தியநாதரிடத்தில் நோய் நீங்கப்பெறுவான் வேண்டிப் பெறும் மாத்திரை. இதனைச் செய்து உண்ண விரும்புவோர் சுக்கிலபக்கத்தில் நன்ஞழிகையில் அங்கசந்தான தீர்த்தத்தில் நீராடி, நடுவிலுள்ள மிருத்திகையை எடுத்துப் புதுப்பாத்திரத்தில் வைத்துக்கொண்டு ஆலயத்திற்கு வந்து, விபூதி குண்டத்திலுள்ள விபூதியையும் சித்தாமிர்த தீர்த்த நீரையும் அதனுடன் கலந்து பஞ்சாக்கரம் செபித்துக்கொண்டே பிசைந்து, முத்துக்குமாரர் திருமுன்புள்ள குழியம்மியிலிட்டு அரைத்து, கடுகளவாக உருண்டைகள் செய்து, அம்மையார் திருவடியில் வைத்து அருச்சித்த பின்னர், முறைப்படி இறை வழிபாடியற்றி உருண்டையைச் சித்தாமிர்தத் தீர்த்தத்தோடு நியமமாகக் கலந்து உண்ணல் வேண்டும். அவ்வாறு உண்பவர்கள் தீராத வினைகளெல்லாம் தீர்ந்து முத்தியின்பத்தை யடைவர்.

" விண்மருந் துதிக்கும் மண்மருந் தருந்தியும் "

" வினைதீர்த்த பெருமான் பக்கல் மண்ணுண்டு "

" வந்தவந்த பேர்களுக்கு மண்மருந் தளிக்கிறீர் "

" ஒருண்டை மண்ணை யுண்டால் ஐயிரண்டு
பிறப்பு மவர்க்கொழிக்கலாமே "

" வாயிலே மண்போட்டு வாங்குவர்காண் அம்மானை"

என்பன இவ்வூர்க் கலம்பகச் செய்யுட் பகுதிகள்.

## தீர்த்தங்கள்

1. *சித்தாமிர்தத் தீர்த்தம் :-* இதுவே எல்லாத் தீர்த்தங்களிலும் முதன்மையானது. அம்மையாரின் சந்நிதானத்தில் இருக்கின்றது. கிருதயுகத்தில் காமதேனு இத்தலத்து வந்து தனது முலைக்குடப்பாலால் இறைவரது திருமுடியில் அபிஷேகிக்க அந்தப்பால் பெருகிக் கலந்தமையால் கோக்ஷீர தீர்த்தம் என்றும், திரேதாயுகத்தில் சிவனடியார் ஒருவருக்குக் கருப்பஞ்சாறு போல இனித்ததால் இக்ஷுசார தீர்த்தம் என்றும், துவாபரயுகத்தில் சடாயு பலகால் மூழ்கி வழிபட்டமையால் சடாயு தீர்த்தம் என்றும் பெயர் வழங்கப்பட்டன. இந்தக் கலியுகத்தில் சித்தர் கணம் இறைவர் திருமுடியில் தேவாமிர்தத்தால் அபிஷேகித்த போது அவ்வமிர்தம் இதிற் கலந்தமையால் சித்தாமிர்தத் தீர்த்தம் என்று பெயர் வழங்கப்படுகிறது. சுந்தரனென்னும் அந்தணனொருவனுக்கு ஏற்பட்ட வெண்குட்டமும், அங்காரகனது செங்குட்டமும் நீங்கியது. பிராயச்சித்தத்தாலும் தீராத சிவத்துரோகம் செய்த தக்கனுக்கு உடலும் தலையும் ஒன்று சேரும்படி செய்தது.

சதானந்தர் என்னும் முனிவர் இதில் நீராடித் தியானம் செய்யுங்கால், பாம்பால் துரத்தப்பட்ட தவளை ஒன்று அவர்மீது பாய்ந்து அவரது தியானத்தைக் கலைத்தது. முனிவர் கோபித்து "இத் தீர்த்தத்தில் எக்காலமும் தவளைகளும் பாம்புகளும் இல்லாதுஒழியக்கடவன" என்று சாபமிட்டார். இன்றளவும் தவளை முதலியன இல்லாமல் இருப்பது காணத்தக்கது. இத் தீர்த்தத்தின் மகிமையைப் பற்றி "வற்ருச் சித்தாமிர்தத் தீர்த்தத் துறைக்குறுந்திவலை யொன்றேயமையும்" எனக் குமரகுருபரரும் அருளியிருத்தல் காண்க.

மேலும் இதன் சுற்றிலும் கிழக்குமுதலாக எட்டுத்திக்குகளிலும் இந்திர தீர்த்தம், பத்தி தீர்த்தம், சர்வ தீர்த்தம்,

முத்தி தீர்த்தம், பிஞக தீர்த்தம், மங்கள தீர்த்தம், ஞான தீர்த்தம், துர்வாச தீர்த்தம் என்ற எட்டுத் தீர்த்தங்கள் விளங்குகின்றன. இவ்வெட்டும்தம்மிடத்துமூழ்குவோர்க்கு முறையே அட்டசித்திகளையும் கொடுக்க வல்லன. இவ்வெட்டிலும் அட்டவசுக்களும், எட்டு முனிவர்களும் நீராடிப் பல பேறுகளும் பெற்றிருக்கின்றனர். இவைகள் ஒவ்வொன்றுக்கும் அதிதெய்வங்களும், விருட்சங்களும் தனித்தனியே தலபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக் கின்றன.

2. கோதண்டதீர்த்தம் :- இது தென்மேற்குமூலையில் இருக்கிறது. இதற்கு அதிதெய்வம் இராமர். காவற் கடவுள் இலக்குமணர். விருட்சம் வன்னி துசீலன் என்னும் சித்தன் இதன் கரையில் வசித்து வந்தமையால், சித்த தீர்த்த மென்று முன்னர்ப் பெயர் பெற்று விளங்கியது. மேற்கூறிய துசீலன் செய்த பாபத்தால் உண்டான குமர கண்டவலி என்னும்நோயைநீக்கியதும் இத்தீர்த்தமேயாம். இராமபிரான் சீதாபிராட்டியாரோடும், தம்பி இலக்குமண ரோடும் வனவாசஞ் செய்யுங்கால் இத்தலத்தை யடைந்து இதில் நீராடி இறைவனை வழிபட்டுத் தன் குலத்துப் பிதுரர்களுக்கும், இராவணனால் சிறகரியப்பட்டு இறந்த சடாயுவுக்கும் தருப்பணம் செய்தமையால் இராமதீர்த்தம் எனப் பின்னர் பெயர்பெற்றது. பங்குனி உத்தரத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமான் இதில் தீர்த்தங்கொடுத்தருளுவர். பிரார்த்தனைக்காக முடி எடுக்க வருபவர்கள் முடி எடுத்த வுடன் இதில் நீராடி அதன் பின்னரே சிதாமிர்தத் தீர்த் தத்திற்குச் செல்வார்கள்.

3. கௌதம தீர்த்தம் :- இது இராம தீர்த்தத்திற்கு அருகில் தென்கீழ்த்திசையில் விளங்குகிறது. இதற்கு அதி தெய்வம் வாயுபகவான். காவற்கடவுள் சந்திரன். விருட்சம்மாமரம். இதுகௌதமரால்உண்டாக்கப்பட்டது.

4. வில்வ தீர்த்தம்:- ஆலயத்திற்கு வடக்கே விளங்குகிறது. இதற்கு அதிதெய்வம் இந்திரன். காவற்கடவுள் தண்டபாணி. விருட்சம் வில்வமரம். வில்வமரங்களால் சூழப்பெற்றமையால் இப்பெயர் பெற்றது. இதனை உண்டாக்கினோர் விசுவதேவர்கள்.

5. முனிவர் தீர்த்தம் :- கீழவீதிக்குக்கிழக்கேயுள்ளது. அதிதெய்வம் சந்திரசேகரர். காவற் கடவுள் கருடன். விருட்சம் ஆலமரம். காற்கியன் காசிபன் முதலிய முனிவர்கள் எழுவரும் நீராடித் தவம் செய்தமையால் இப்பெயர் பெற்றது. தக்கனின் தலையை அறுத்த வீரபத்திரர் இதில் நீராடித் தன்னைப் பற்றித் துன்புறுத்திய வீரகத்தியைப் போக்கி இறைவரை வணங்கிக் கீழைக்கோபுர வாயிலில் துவாரபாலகராய் விளங்குகின்றார்.

6. அங்கசந்தான தீர்த்தம் :- இது வடகீழ்த்திசையிலுள்ளது. அதிதெய்வம் வயித்தியநாதர். காவற் கடவுள் அஸ்திரதேவர். விருட்சம் விளா. தாரகனோடு போர் செய்து மூர்ச்சித்துக் கிடந்த தேவர்களைக் காக்க இறைவன் தன் சூலத்தால் தீர்த்தமுண்டாக்கித் தேவர்களது சிதைந்த அங்கத்தை அத்தீர்த்தநீரில் நனைத்துப் பொருந்தச் செய்தமையால் இப்பெயர் பெற்றது. சிவதன்மன் என்னும் பிராமணன் செய்துவந்த கொடிய பாவங்களால் பிரமராக்ஷசாய்ப் பிறந்து இத்தீர்த்த நீர் பட்டமாத்திரையே முன்னைய வடிவுபெற்றான்.

மற்றையன :- ஆதிகாவிரி தீர்த்தம், கபில தீர்த்தம், சூரிய தீர்த்தம், சூல தீர்த்தம், சேட தீர்த்தம், சோமதீர்த்தம், தக்க தீர்த்தம், பராசர தீர்த்தம், பீம தீர்த்தம், மிருதசஞ்சீவன தீர்த்தம், வித்தியாதர தீர்த்தம் என்பவைகளாம், இத்தீர்த்தங்களில் மூழ்கும் முறையும், நாளும், அதனால் உண்டாகும் பலனும் தலபுராணத்திற் கண்டு கொள்க.

## நித்திய பூஜைகளும் திருவிழாக்களும்

நாள்தோறும் காமிக ஆகம விதிப்படி ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன. பிரமோற்சவம் பங்குனித் திங்களில் நடைபெறும். அதில் ஐந்தாந் திருநாளன்று ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் ஸ்ரீ வைத்தியநாதரைப் பூசித்துச் செண்டு பெறும் காட்சி மிகச் சிறப்பானது. பிரமோற்சவத்தில் கங்காவிசர்ஜனருக்கும் உற்சவமுண்டு. ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்குத் தைத்திங்களில் திருவிழா நடைபெறுகிறது. கடைசிச் செவ்வாயன்று தீர்த்தத்திருவிழா நிகழும். செவ்வாய்க்கிழமைகளில் மக்கள் கூட்டமாக வந்து சித்தாமிர்த தீர்த்தத்தில் மூழ்கி, சுவாமி தரிசனம் செய்வார்கள். உற்சவ காலங்களில் சுவாமி எழுந்தருளும்போது கயிலையில் சோமாஸ்கந்தர் எழுந்தருளியிருப்பதே போன்று நடுவில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் எழுந்தருளிவர, சுவாமி ஓர் புறமும் அம்மையார் மற்றொரு புறமும் எழுந்தருளுவர்.

திங்கள்தோறும் வரும் கார்த்திகைத் திருநாட்கள், கந்தர்சஷ்டி போன்ற விசேட நாட்களில்தான் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரருக்கு அபிடேகம் நடைபெறும். மற்றைய நாட்களில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரரின் ஆன்மார்த்தபூஜா மூர்த்தியான ஸ்ரீ முத்துலிங்கத்திற்குத்தான் அபிடேகம் நடைபெறும். ஏனையதலங்கள் போலல்லாமல், அர்த்தயாம பூசாகாலத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரருக்கு வழிபாடு நடந்தபின்னர்தான் சுவாமிக்கு வழிபாடு நடைபெறும். இதற்குத்தான் புழுகாப்பு என்று பெயர். இப்புழுகாப்பு தரிசனந்தான் இத்தலத்திற்குச் சிறப்பு மிக்கது.

அங்காரக க்ஷேத்திரமானதால் செவ்வாய்க்கிழமை தோறும் மாலையில் ஆட்டுக்கடா வாகனத்தில் அங்காரகன் எழுந்தருளிப் பிராகாரத்தில் வலம் வருவார். இவைகளன்றியும் அம்மையாருக்கு ஆடிப்பூரம் நவராத்திரி உற்சவங்களும், பிறவும் நடைபெற்று வருகின்றன.

## வழிபட்ட பிற அன்பர்கள்

வடுகநாத தேசிகர் :- இவர் காத்தியாயனிருப்பு எனும் ஊரிற் பிறந்தவர். வேளூர்த் தல புராணம் இவரால் இயற்றப்பெற்றதே. அது 1133 திருவிருத்தங்களையுடையது.

சிவஞான தேசிகர் :- தருமையாதீனத்தில் பத்தாவது குருமூர்த்தியாக விளங்கிய இவர்கள் அருட்பா என்னும் பெயரால் பல சிறுதோத்திர நூல்களை இயற்றியுள்ளார்கள். அவற்றுள் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி திருவருட்பாவும் ஒன்று. இவர்கள் கவிகளிற் கனிவும் தெளிவும் இருக்கின்றன என்று சொல்வது மிகையாகாது. அன்பு பழுத்த உள்ளம் அருள்கனிந்த கவிதையையன்றி வேறு எதனைச் சொல்லும்.

குமாரகுருபர சுவாமிகள்:- இவர்கள் 4ஆவது குருமூர்த்தியான ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாசாரியரிடம் உபதேசம் பெற்றவர்கள். இவர்கள் வடநாட்டிலும் தமிழும் சைவமும் பரவச் செய்தவர்கள். இவர்கள் இயற்றியது முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் என்னும் கற்பனை கனிந்த நூலாகும்.

படிக்காசுத் தம்பிரான் :- தருமையாதீனத்து முனிவர்களில் ஒருவர். புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம் இவரால் செய்யப்பெற்றது. பண்பாய பகர் சந்தம் அமைந்த பல பாக்கள் விரவத்தொடுக்கப்பெற்றது. "இதில் அடியார்கள் உய்ய உண்டை மருந்தளிக்கும் நீர் உமது மையலுக்கு மருந்தறியவில்லையே" "ஊருக்கு வைத்தியன் தன்னுடம்புக்கு விரோதி என்ற பழமொழி போல ஆயினீர்" என நகைச்சுவை தோன்றக் கூறியுள்ளனர். இன்னும் இது போன்ற பல சுவையுள்ள பாடல்கள் இயற்றுதலில் இவர் வல்லவர்.

சிதம்பரமுனிவர் :- இவர்களியற்றிய நூல் க்ஷேத்திரக் கோவைப்பிள்ளைத்தமிழ். அதில் முத்தப்பருவத்தில் முத்துக் குமாரரைத் தோத்திரிக்கின்றார்கள். இச்செய்யுளில் முருகன் கவிசொல்லென்று ஆணையுந்தந்து அடியெடுத்துக்கொடுக் கப் பாடிய புலவர்களனைவர் பெயரும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

காளமேகப்புலவர் :- இவரை யறியாத தமிழ் மக்கள் இருக்கமுடியாது. விகடகவி. இவர் பாடிய தனிப்பாடல் கள் பல. அவற்றுள் இருபதுக்கு மேற்பட்ட பாடல்கள் புள்ளிருக்கு வேளூரைப் பற்றியன.

இராமலிங்க சுவாமிகள் :- வடலூர் சத்திய ஞான சபையை நிறுவியவர்கள். ஜீவகருணையும் தயையுமே தம் கொள்கைகளாகக் கொண்டவர்கள் மக்களிடம் சமரச ஞானம்பரவத் தக்கவழி செய்தவர்கள். தாம் இயற்றிய வைத்தியநாதர் பதிகத்தில் அப்போது கட்டளை விசாரணை யாக இருந்த உலகநாத முனிவர் அவர்களையும் பற்றிக் குறித்துள்ளார்கள்.

உலகநாத முனிவர் :- பதினைந்தாவது குருமூர்த்தி யாகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் உபதேசம்பெற்ற வர்கள். வடலூர் இராமலிங்கசுவாமிகள் இவர்களை வைத்தியநாதர் பதிகத்துப் பன்னிரண்டு பாடல்களிலும் 'தவசிகாமணி உலகநாத வள்ளல்' என்று குறிப்பிட்டுள் ளார்கள்.

முத்துக்குமாரசாமித் தம்பிரான் :- வேளூர்க் கட்டளை விசாரணையிலிருந்த காலத்து இவர்கள் செய்த தேவாலயப் பணிகள் பல. தேவஸ்தான வருவாய் பெருகப் பெரிதும் உழைத்தவர்கள் இவர்களே. இவர்களைப் பற்றிய கல் வெட்டுக்களும் உள்ளன

அட்சயலிங்கத் தம்பிரான் சுவாமிகள் :- சிறந்த சாத் திர தோத்திரப் பயிற்சியாளர். "அட்டமாசித்திவல்ல அக்ஷயலிங்கசாமி" என இவர்களைப் பட்டயம் ஒன்று

புகழ்கிறது. வேளூர் விசாரணையில் இவர்கள் இருந்த காலத்து, சொத்து அதிகமில்லாமையால் பூசைக்கே போது மான வருவாய் இல்லாமலிருந்தது. பயிர் செய்யக் காளை முதலிய சாதனங்கள் கூடச் சேகரிக்க முடியவில்லை. மடத்திலிருந்த ஒரு காளையை ஒரு பக்கம் பூட்டி மற்றொரு பக்கத்து நுகத்தடியைத் தம் கழுத்தில் வைத்துக்கொண்டு உழுதார்களாம். அவ்வழிச் சென்ற அரசன் மனம் கவன்று ஆவன பலசெய்தான். இவர்கள்தான் வடுகநாத தேசி கரைக்கொண்டு தல புராணம் பாடுவித்தவர்கள்.

## நிர்வாகம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்திற்குட்பட்ட தேவஸ்தானங்களுள் இதுவும் ஒன்று. இருபத்தாருவது ஆதீனகர்த்தரவர்களாக எழுந் தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் ஆதீனகர்த்தாஸ்தானத்தை வகிக்க ஆரம்பித்த 12—11—71 முதல் இவ்வாலயத்தையும் பரிபாலனம் செய்து வருகின்ருர்கள்.

ஆண்டானை அடியேனை யாளாக் கொண்டு
அடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை
நேமிவான் படையானி ளுரவோ ளுகம்
கீண்டானைக் கேதார மேவி னானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோடென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளு ரானைப்
போற்ருதே யாற்றநாள் போக்கி னேனே.

— திருநாவுக்கரசு சுவாமிகள்.



உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

## தருமையாதீனத் திங்கள் இதழ்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தி லிருந்து நாற்பது ஆண்டுகளாக வெளிவரும் அரிய திங்கள் இதழ் ஞானசம்பந்தம். இந்தியாவிலும், கடல்கடந்த நாடுகளிலும் வாழும் ஆயிரக்கணக்கான சைவ - தமிழ் அன்பர்களால் பெரிதும் போற்றப் படுவது. சைவ சமயம் பற்றிய அரிய கட்டுரைகளும், மற்றும் தமிழ் இலக்கணம் - இலக்கியம் - மருத்துவம் - சோதிடம் போன்ற பலதுறைக்கட்டுரைகளும் தாங்கி வருவது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திங்கள்தோறும் வழங்கியருளும் அருளாசி உரை ஆன்மீக ஈடேற்றத்திற்குப் பெருந்துணையாய் அமைவது.

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ... | ரூ. 10—00 |
| ஆண்டுச் சந்தா | ( சிலோன் ) | ... | ரூ. 23—00 |
| ஆண்டுச் சந்தா | (வெளிநாடு) | ... | ரூ. 25—00 |
| ஆயுள் சந்தா | ( உள்நாடு ) | ... | ரூ. 100—00 |
| ஆயுள் சந்தா | (வெளிநாடு) | ... | ரூ. 250—00 |

### விளம்பரம்

| | | |
|---|---|---|
| பின் அட்டை வெளிப்பக்கம் | 2 - கலர் | 300—00. |
| ,, உட்பக்கம் | 1 - கலர் | 200—00. |
| உட்பக்கம் முழுபக்கம் | ,, | 100—00. |
| ,, அரைப்பக்கம் | ,, | 50—00. |

செயலாளர், :— ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் - 609 001
தஞ்சை மாவட்டம்